ரேன்று மெனத்திரும்பித், தந்த மிடத்திற் சென்றார்க டவனுஞ் சிறிது நாட்கழித்துத், தொந்த மொன்று மில்லாத சுயமா முத்தி தாஞனன். (116)

(இ—ள்) வந்த பேர்களுடன் - (மா புரியி லிருந்து) வந்த மாதா, பிதா, மனைவி, மற்றைய ஜநங்களோடு, வார்த்தை - (ஒரு) பேச்சையும், மலராது - பேசாது, இருப்பது - இருப்பதை, அவர் - அவர்கள், அறிந்து - உணர்ந்து, பந்தம் உடையேம் - (நாம்) அஞ்ஞாநிகளா யிருக்கின்றேம், பகர்ந்தால் - (அவர் பிரம்ம ஞாநத்தைக்) கூறினல், நமக்கு - நமக்கு, என்னே - யாது, தோன்றும் - விளங்கும் (ஒன்றும் விளங்கா தாம்), என - என்று நினைத்துக்கொண்டு, திரும்பி - (வந்த வழியே) மீண்டு, தம் தம் இடத்தில் - அவ ரவர் வீட்டிற்கு, சென்றார்கள் - போனர்கள், தவனும் - (பிரம்ம) தவத்தினை யுடைய மஹா ராஜனும், சிறிது நாள் கழித்து - சொற்ப கால மாகிய பிராரப்த கர்ம ஒழிவு பரியந்தம் (சரீரத்தோடு) இருந்து, தொந்தம் - துவந்துவங்கள், ஒன்றும் - கொஞ்சமும் (எதுவும்), இல்லாத - இன்றிய (விதேக கைவல்லிய மென்னும்), சுயம் ஆம் முத்தி - (தனது) இயல் பான மோக்ஷ சொரூபம், ஆனன் - ஆயினன், (எ-று).

என்னே - எவன் என்னும் விஞ வினைக் குறிப்பின் விகாரம். தவனும் - உம் - இறந்தது தழீஇய எச்சம். ஒன்றும் - உம் - முற் றும்மை. தா ஞனன் - தான் - அசை நிலை. அவர் - எழுவாய். சென்றார்கள் - பய னிலை. தவன் - எழுவாய். ஆனன் - பய னிலை. (116)

இந் நூற் பயனும், இறைவி வணக்கமும், கூறல்.

இந்தமா ராஜன் சென்ற விதிகாசந் தனைப்ப டிப்போர், சிந்தனை யொன்று மின்றித் தீரவே துறவ ராகி,